# குறள்நெறி

**-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-**

*மின்னிதழ்:104 -சித்திரை-3--தி.பி.2056 ஏப்பிரல்—16--- பொ.ஆ.2025*

**நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்**


புலவர்மணி செ.வரதராசனார்

(25-04-1925 -13-04-2013 )

நூற்றாண்டுச் சிறப்பிதழ்



கல்லக்குறிச்சி வந்த முதல்வர் அறிஞர் அண்ணாவுக்கு வரவேற்புக் கவிதை



புலவரின் பெற்றோர்



புலவர்மணி செ.வரதராசனார்

(25-04-1925 -13-04-2013 )



கல்வியமைச்சர் நாவலர் வழங்கும் நல்லாசிரியர் விருது



மணிவிழா காணும் கலைஞருக்குப் பிறந்தநாள் வாழ்த்து




வாழும் முறைமைக்கு வழிகாட்டிய செ.வ.உருக்குமணி அம்மையார்- புலவர்மணி செ.வரதராசன்


**சிறப்பாசிரியர் குழு: முனைவர் பொற்கோ (முன்னைத் துணைவேந்தர், சென்னைப்பல்கலைக்கழகம்) முனைவர் இ.சுந்தரமூர்த்தி (முன்னைத் துணைவேந்தர், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம்) முனைவர் இர.பிரபாகரன் (மேரிலாந்து,அமெரிக்கா) முனைவர் அன்புசெயா (சிட்னி,ஆத்திரேலியா) பாவலர் முரசு நெடுமாறன் (மலேசியா) பேரா.மன்னர்மன்னன் (மலேசியா) பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ (பிரான்சு) கவிஞர் அழ.பகீரதன் (இலங்கை ) கலாநிதி சயந்தினி விக்னராசன் (இலங்கை) பொறியாளர் ச.இராசகுமாரன் (அயர்லாந்து) எலியாசு (சிங்கப்பூர்)திருமதி.மதிவதனி பத்மநாதன் (சுவிட்சர்லாந்து) திருமதி.தாமரை சீனிவாசராவ் (கம்போடியா) முனைவர் இராம சுந்தரம் (கொரியா) தீனதயாளன்(கனடா) பேராசிரியர் தமிழியலன் (சென்னை) இணையாசிரியர்; பாவலர் செல்வ.மீனாட்சிசுந்தரம்**

**பொறுப்பாசிரியர்: மறைமலை இலக்குவனார்**

தெள்ளுதமிழ்ப் புலமையால் வெள்ளமெனத் தமிழ்க் கல்வி பயிற்றினார்; வள்ளுவம் பரவிடப் பொழிவும் எழுத்தும் வழங்கினார்- கல்லை மண்ணில் குறளுக்குக் கழகமும் தமிழுக்குச் சங்கமும் நிறுவினார்-தலைசிறந்த தமிழர்களைத் தலைமைப் பண்புடன் உருவாக்கினார்-என்றும் நம் உள்ளத்தில் நீங்கா இடம் பெற்றார்

செந்தமிழ் வல்லுநர்
குறள்மணம் – புலவர்

# செ.வரதராசனார்

பிறந்த நாள்: 25–04–1925
**100 – ஆம் ஆண்டு பிறந்த நாள்**
நிறைந்த நாள்: 13–04–2013.

100
நூற்றாண்டு விழா
25–04–2025

'பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்' (குறள் 975)

- அரசு ஆடவர் மேல்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியர் – 36 ஆண்டுகள்
- தலைமை ஆசிரியர் – ஈராண்டுகள்
- நிறுவுநர்: கல்லைத் தமிழ்ச் சங்கம் – 63 ஆண்டுகளாக செயல்பட்டுக்கொண்டிருக்கிறது
- குறள்மணம் திங்களிதழ் – 10 ஆண்டுகள்
- ஐநூறுக்கும் மேற்பட்ட – மூன்று தலைமுறை மாந்தர்க்கு சீர்திருத்த மேடைத் திருமணங்கள்.
- வாரந்தோறும் திருக்குறள் வகுப்புகள் – மூன்று சுற்றுகள்.
- தமிழ் இலக்கிய மற்றும் இலக்கண வகுப்புகள்.
- நுழைவாயில் திருக்குறள் பலகைகள்
- திருக்குறள் உண்மை உரை, காமத்துப்பால் வழங்கும் வாழ்வியல் பாடங்கள், கண்ணகி – தமிழரின் பண்பாட்டு சின்னம், தமிழ்ப்பாவை, மணக்கும் மலர்கள், புலவர் செ.வரதராசன் கவிதைகள், கலைஞர் நூறு உள்ளிட்ட பல நூல்களை வெளியிட்டு உள்ளார்.
- பாரதிதாசனின் 'இருண்ட வீடு' – வானொலி நாடக ஆக்கம், வானொலியில் தமிழ்ப் புத்தாண்டு சிறப்பு கவியரங்கத் தலைமை, கருத்துரைகள், பட்டிமன்றப் பேச்சரங்குகள், நிலா கவியரங்கம் உள்ளிட்ட பல்வேறு நிலைகளில் தமிழ்ப் பணிகள்
- சிற்றூர்களில் திருக்குறள் உலா, தலைநகர் புதுதில்லியில் திருக்குறள் – தேசிய நூலாக உண்ணாநிலைப் போராட்டம்.
- தமிழ்நாடு அரசின் நல்லாசிரியர், திருக்குறள் நெறித்தோன்றல், திருவள்ளுவர் விருது பெற்றுள்ளார்.
- தனியார் அமைப்புகள் வழங்கி மகிழ்வித்த 'செந்தமிழ் வல்லுநர்' உள்ளிட்ட முப்பத்தைந்திற்கும் மேற்பட்ட விருதுகள்.
- தனது இறப்பிற்குப் பின்னர் கண்கள் மற்றும் உடல் நன்கொடை வழங்கியவர்.

செந்தமிழ் வல்லுநர், குறள்மணம் புலவர் செ.வரதராசனார் அவர்களின்
நூற்றாண்டு பிறந்த நாளில் (25–04–2025) ஐயா
அவர்களைப் போற்றுவோம்! புகழ் பாடி வணங்குவோம்!

- **ஐயா அவர்களின் மறைவிற்கு பின்னர் ஒவ்வோர் ஆண்டிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட இருவருக்கு, கல்லைத் தமிழ்ச்சங்கம் 'புலவர் செ.வரதராசன் – குறள்மணம் விருதுகள்' வழங்கி வருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.**

25–04–2025 புலவர் செ.வரதராசனார் அவர்களின் நூற்றாண்டில், நாடு முழுவதும் நூறு விழாக்கள் நடத்தி மகிழ உள்ளோம். அவரது நூல்கள் அனைத்தும் திருத்தப்பட்ட மறுபதிப்பாக வெளிவர உள்ளன.

அன்புடன்
**கல்லைத் தமிழ்ச்சங்கம், கல்லக்குறிச்சி**
மற்றும்

செ.வ.புகழேந்தி 99941 29405
செ.வ.மதிவாணன் 94430 44723
செ.வ.மகேந்திரன் 99656 52731
செ.வ.இராமாநுசன் 9444269902
வ.தி.சோழவேந்தன் 88704 41482
வ.தி.ஸ்ரீராம். 73581 74338
செ.வ.கண்ணகி சீத்தாராமன். 86808 22121

## என்றும் வாழும் 'செந்தமிழ் வல்லுநர்' 'குறள்மணம்' புலவர் செ.வரதராசனார் அவர்களின் வாழ்க்கை வரலாறு!

(புலவர் செ. வரதராசனார் நூற்றாண்டு விழா வெளியீடு) நாள்: 25-04-2025

--செந்தமிழ்ச்செம்மல் செ.வ.இராமாநுசன்

'தோன்றிற் புகழொடு தோன்றுக!'

முன்னுரை:

அண்டம் - ஞாலம் - கண்டம் - நாடு என்பன விரிந்து பரந்து காணப்படுகின்றன. பெருநிலப் பரப்புதனை, வாழும் மாந்தரினம் ஐவகை நிலங்களாகப் பிரித்து இவ்வுலகினை ஆண்டு வந்தது; வருகின்றது.

இயற்கை என்பதுவும் ஓர் புள்ளியில் பல துறைகளை உள்ளடக்கிக் காணப்படுகின்றது. அதனால்தான் எத்தனையோ அறிவியல் முன்னேற்றங்கள் நாள்தோறும் நம்முன் வலம் வரக் காணுகின்றோம்.

முன்னேற்றங்கள் பல தோன்றினாலும், மாந்தர்களின் ஒன்றுபட்ட வாழ்க்கை என்பது உயர்ந்தும், சிறந்தும், அமைதியும், நிறைவும் பெற்றிருக்க வேண்டும். அதற்கு முழுமுதற் காரணம் மொழி-இன-நாட்டுப்பற்று எனலாம்.

பற்பல அறிஞர்களும் புலவர்களும் காலங்கள் தோறும் தோன்றியுள்ளனர். தங்களின் கடமைகளைச் செய்து வாழ்ந்துள்ளனர்.

அந்த வகையில் கல்வராயன் மலைத் தொடரை ஒட்டி அமைந்துள்ள கல்லக்குறிச்சி மாவட்டத்தில், சங்கராபுரம் வட்டம் மோ.வன்னெஞ்சூரில் பிறந்து - வளர்ந்து - சிறந்த பேராளர் தாம் செந்தமிழ் வல்லுநர் - குறள்மணம் புலவர் செ.வரதராசனார் அவர்கள்.

25-04-1925 இல் தோன்றினார். 13-04-2013 இல் இயற்கை அடைந்தார். ஐயா அவர்களின் நூற்றாண்டில் அவரைப் பற்றிய முழு வாழ்க்கை வரலாற்றை நோக்குவோமாக!



பிறப்பு:

புலவர் செ.வரதராசனார் அவர்கள், கள்ளக்குறிச்சி மாவட்டம் - சங்கராபுரம் வட்டம், மோ.வன்னஞ்சூரில் செல்லப்பிள்ளை - இராமானுஜம் அம்மாளுக்கு மூத்த மகனாக 25-04-1925 இல் பிறந்தார்.

கள்ளக்குறிச்சி மாவட்டம் - சங்கராபுரம் வட்டம், சௌந்தரவல்லிப் பாளையம் என்னும் ஊரில் நாராயணசாமி - ஜானகி அம்மாள் இவர்களின் மூன்றாவது மகளாக 02-10-1931 இல் திருமதி உருக்குமணி அம்மையார் அவர்கள் பிறந்தார்.

கல்வி:

புலவர் செ.வ. அவர்கள் மோ.வன்னஞ்சூர் துவக்கப் பள்ளியிலும், கள்ளக்குறிச்சி கழக உயர்நிலைப் பள்ளியிலும் படித்தார். பின்னர் மயிலம் சிவஞான பாலய்ய அடிகளார் தமிழ்க் கல்லூரியில் பயின்று, புலவர்

பட்டம் பெற்றார். சென்னை சைதாப்பேட்டையில் உள்ள ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியர் பயிற்சி பெற்றார். மேலும் சென்னை பல்கலைக்கழகத்தில் பி.லிட் கல்வியும், சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் எம்.ஏ., பி.எட்., கல்வியும் படித்தார்.

தமது கல்விக் காலத்தில் தமக்கு பாடம் சொல்லிக் கொடுத்த ஆசிரியர்களான வன்னஞ்சூர் திரு அரங்கசாமிப் பிள்ளை, காட்டு வன்னஞ்சூர் திரு கிருஷ்ணசாமி ஐயர், திரு வீரராகவ ஐயர், இந்தி ஆசிரியர் திரு கல்யாணராமன், ஓவிய ஆசிரியர் திரு தங்கவேல், திரு கனகசபாபதி ஐயா, திரு இராமநாதம் பிள்ளை மற்றும் சமஸ்கிருத ஆசிரியர் திரு சீனிவாச ஐயங்கார், உடற்பயிற்சி ஆசிரியர் திரு வெங்கட்ராம ஐயர் இவர்கள் போன்றோரை என்றும் நினைவில் வைத்து, மகிழ்ந்து பணியாற்றி வந்தவர்.

உறவுகள்:

தமது இளமைக் கால நண்பர்களான திருவாளர்கள் வி.என்.இராமசாமி, வி.என்.நாராயணசாமி, ஆறுமுகம் பிள்ளை, சீனிவாசன், பாண்டுரங்கன் மற்றும் திரு அ. கண்ணையா இவர்களின் போற்றுதலுக்கும் மகிழ்ச்சிக்கும் என்றும் மறக்க முடியாத நினைவுகள் அலைமோதிட வாழ்ந்து வந்தார்.

தம்முடன் பிறந்தவர்களான திரு பார்த்தசாரதி, திரு தேவராசன், திரு இராமச்சந்திரன், திரு கோதண்டராமன், தங்கை உருக்குமணி மற்றும் தமக்கைகள் ஜானகி அம்மாள், இராசம்மாள், உலகநாயகி, பாக்கியம் இவர்களின் ஒத்துழைப்பில் பல்லொண்ணா சிறப்புகளைப் பெற்றுள்ளார். தமக்கு தாயார் அம்மாள் உட்பட ஐவர் அத்தைமார்கள் என்பதிலும், அங்கு செட்டிபாளையம் பண்ருட்டியில் தாய்மாமன்கள் எத்திராஜுலு மற்றும் பெருமாள் என்பதிலும் மட்டற்ற மகிழ்வு கொண்டவர்.

திருமணம்:

1948 இல் கடலூர் மாவட்டம் திருவகிந்தபுரம் தேவநாத சுவாமிகள் திருக்கோயிலில், தனது அக்காள் மகள் உருக்குமணி அவர்களைத் திருமணம் செய்து கொண்டார்.

'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.'

என்னும் திருக்குறளுக்கு ஒப்ப, திருமணம் செய்து இல்லற வாழ்க்கையை நடத்தினார்கள்.

'மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு' அல்லவா?

புலவர் செ.வரதராசன் - உருக்குமணி அம்மையார் இணையருக்கு ஆறு ஆண் மகன்களும், ஒரு பெண் மகளும் பிறந்தனர். அவர்கள் சேரலாதன், புகழேந்தி, மதிவாணன், மகேந்திரன், இராமானுசன், திருமால் அழகன் மற்றும் மகள் கண்ணகி ஆவர். இவர்களில் தலைமகன் சேரலாதன் குழந்தையாக இருக்கின்ற பொழுதே, இயற்கை அடைந்து விட்டார். மற்றவர்கள் நல்ல கல்வியைப் பயின்றனர். பொறுப்புள்ள பணிகளை ஆற்றினர்.

அனைவருக்கும் திருமணமாகி மருமகள்கள், மருமகன், பெயரன்கள், பெயர்த்திகள், கொள்ளுப்பெயரன்கள் என ஆல் போல் தழைத்து அருகு போல் வேரூன்றி, சிறந்த பெற்றோர்களாக ஒவ்வொருவரும் வாழ்ந்து வருகின்றனர். ஐயா அவர்களின் இளைய மகன் செ.வ.திருமால் அழகன் அவர்கள் தம் வாழ்நாளின் இடைக்காலத்தில் எதிர்பாரா விபத்தில் தன் இன்னுயிரை இழந்தார்.

அடித்தளப் பயிற்சி:



1947-இல் படிப்பை முடித்தவுடன், விடுமுறை நாளில் ஈரோட்டில் தந்தை பெரியார் அவர்கள் நடத்திய பாசறைப் பயிற்சியில் சேர்ந்தார். தந்தை பெரியார் அவர்களின் வீட்டிலேயே, ஆறு வாரங்கள் தங்கியிருந்து, முறையான திராவிடப் பயிற்சியைப் பெற்றிருந்தார்.

பணியேற்பு:தமிழ் ஆசிரியர் பணி வாய்ப்பு பெற்ற ஐயா புலவர் செ.வ. அவர்கள் பொன்னேரி, நெல்லிக்குப்பம், பரங்கிப்பேட்டை, சின்னசேலம், உளுந்தூர்பேட்டை, கள்ளக்குறிச்சி போன்ற இடங்களில் அரசு பள்ளியில் பணியாற்றினார். கிட்டத்தட்ட 38 ஆண்டுகள் பணியாற்றிய ஐயா அவர்கள், தலைமை ஆசிரியராக, குதிரைச் சந்தல் உயர்நிலைப் பள்ளியில் பணி நிறைவு செய்தார்.இந்நாட்களில் திரு மது.நாராயணசாமி திரு வே.நவரத்தினம் போன்ற பலரும் பின்னாளில் அவரது மாணவர் திரு ஆராவமுதன் போன்றோரும் நல்ல நண்பர்களாகச் சிறப்புற்று இருந்தனர்.

இலக்கியப் பணிகள்:

புலவர்கள் - உணர்ந்தவற்றை உணர்த்துபவர்கள். ஊருணி நீர் போன்றவர்கள். அவர்களின் ஆக்கம் தரும் உணர்வு, இந்த ஊருக்கும் சமுதாயத்திற்கும் பயன்பட வேண்டும்; பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டும்.

ஐயா புலவர் செ.வ. அவர்கள் கல்வி வளர்ச்சி, தமிழ்ப் பற்று, பண்பாட்டு நலம், திருக்குறள் நெறி போற்றுதல், நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இனப்பற்று போன்றவற்றை மாணாக்கர்களிடம் நிலைபெறச் செய்தார். இலக்கிய மன்றங்கள் மூலம் பேச்சுப் பயிற்சி அளித்தார். உலகளாவிய அறிவைப் பெறச் செய்தார். இப்படி பணியாற்றிய ஐயா அவர்களுக்கு 1974 ஆம் ஆண்டில் தமிழ்நாடு அரசு 'நல்லாசிரியர் விருது' வழங்கி சிறப்பித்தது.

'உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்'

புலமை என்பது உயர்ந்த உணர்வு. ஆழ்ந்த எண்ணங்களின் முதிர்வே உணர்வு. எண்ணம் பெருகப்பெருக சொல் குறையும்; செயல் பெருகும். நம் மனக் கவலையும் நீங்கும்.

ஐயா அவர்கள் முதலில் சிற்றூர் அமைப்பு சங்கங்களின் மூலம், உள்ளூர் மற்றும் வெளியூரில் சென்று மாலை நேர குறள் வகுப்பு நடத்தியுள்ளார்.

தமிழ்த் திருமணங்களில் கலந்துகொண்டு வாழ்த்துரைகள் வழங்கியுள்ளார். மேலும் கிட்டத்தட்ட 500க்கும் மேலான குறள்வழித் திருமணங்களை நடத்தியுள்ளார்.

27-01-1982 முதல் 06-05-1983 வரை இரண்டு ஆண்டுகள், கல்லைத் தமிழ்ச் சங்கம் சார்பில் திருக்குறள் முழுமைக்கும் தொடர்ந்து ஞாயிறுதோறும் வகுப்பு நடத்தியுள்ளார். அக்குறள் வகுப்பிற்கு வருகை தந்த, பல நல்ல அறிஞர்கள் பாராட்டும் வாழ்த்தும் வழங்கி உள்ளனர்.

குறள் மணம் - திங்களிதழ்:

1986 ஆம் ஆண்டு முதல் நமது கள்ளக்குறிச்சியில் இருந்து 'குறள்மணம்' என்னும் திங்கள் இதழை 12 ஆண்டுகளுக்கு மேலாக வெளியிட்டு வந்திருக்கிறார். கிட்டத்தட்ட 149 இதழ்கள் வெளிவந்துள்ளன. அதன் மூலம் பொருள் பொதிந்தத் தலையங்கம், அறிஞர்களின் கவிதைகள், போட்டிகள், திருக்குறள் விளக்கங்கள், ஆங்கில மொழியாக்கம் போன்ற எண்ணற்ற செய்திகளை வெளியிட்டு வந்தார்.

ஒருமுறை 'குறள் மணம்' இதழில் 'வள்ளுவர் கண்ட அறிவியல்' என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரை போட்டி ஒன்று நடத்தப்பட்டது அதில் பலர் கலந்து கொண்டனர். அவர்களில் அறிவியல் அறிஞர் நெல்லை சு.முத்து மற்றும் மருத்துவர் கோபால் எம்.பி.பி.எஸ் ஆகிய இருவரது ஆய்வுக் கட்டுரைகள் முறையே முதலாவது மற்றும் இரண்டாவது கட்டுரையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன. அவ்வறிஞர்கள் இருவரும் தத்தமது கட்டுரைகளை, நூல்களாக வெளியிட்டுள்ளனர்.

'வள்ளுவம் வளர்த்த வளர்தமிழ்ச் சீரிதழ்கள்' என்ற தலைப்பில் குறள்மணம் பற்றி பெங்களூரில் இருந்து வெளியிடப் பெற்ற 'தமிழர் முழக்கம்' என்னும் சிற்றிதழ் சிறப்பாக பாராட்டி எழுதியுள்ளது.

கல்லையில் திருக்குறள் மாநாடு

1962 இல் கள்ளக்குறிச்சி உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவியரைக் கொண்டு டாக்டர் அ.சிதம்பரநாதன் தலைமையில் 'மாணவர் திருக்குறள் மாநாடு' நடத்தினார். அம்மாநாட்டில் மயிலை சிவ முத்து, புலவர் அழகு வேலனார், பேராசிரியர் கா.மீனாட்சி சுந்தரனார் போன்றோர் சிறப்புரையாற்றினர். பேராசிரியர் க.அன்பழகனார் மாநாட்டில் நிறைவுரை ஆற்றினார். சுதேசமித்திரன் நாளிதழில் அம்மாநாட்டு நிகழ்ச்சிகள் சிறப்பாக வெளியிடப்பெற்றன.

டென்மார்க் பாதிரியாருக்கு திருக்குறள் பாடம்:

உளுந்தூர்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் ஐயா அவர்கள் பணியாற்றிய போது, அவ்வூர் டேனிஷ் மிஷன் தேவாலயத்தின் போதகர் திரு கிரிப்சு என்பாருக்கு திருக்குறளில் அறத்துப்பால் அதிகாரங்களை நடத்தி வந்தார். ஒரு வாரத்தில் ஓரிரு அதிகாரங்கள் என நடத்தி வந்தார். அப்போது பாதிரியார் அவர்கள் ஒவ்வொரு குறட்பா வரையும் தமது தாய்மொழியான 'டேனிஷ்' மொழியில் மொழிபெயர்த்துக் கொண்டார்.

கல்லைத் தமிழ்ச்சங்கம்:

25-04-1963 அன்று கல்லக்குறிச்சியில் 'கல்லைத் தமிழ் சங்கம்' தொடங்கப்பட்டது. 63 ஆண்டுகளுக்கு முன்பே நிறுவப்பட்ட கல்லைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக இருந்து, எண்ணற்ற இலக்கிய நிகழ்ச்சிகளை நடத்தி வந்தார், புலவர் செ.வரதராசனார் அவர்கள். தொடக்கத்தில் கல்லைத் தமிழ்ச்சங்கத்தின் செயலாளர்களாக திரு ப.வரதராசன் எம்.ஏ., எம்.எட்., அவர்களும் பின்னர் திரு அ.பு.அறவாழி எம்.ஏ.,எம்.எட்., அவர்களும் பணியாற்றி வந்தனர்.இன்று ஐயா அவர்களின் தலைமகனார் திரு செ.வ.புகழேந்தி அவர்கள் தலைவராகவும் திரு செ.வ.மதிவாணன் அவர்கள் செயலாளராகவும் பணியாற்றி வருகிறனர்.

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களைத் தக்க அறிஞர்கள் பலரைக் கொண்டு, ஆங்கில மாதம் மூன்றாவது ஞாயிறு தோறும் ஆய்வுரைகளும் சொற்பொழிவுகளுமாக செய்து வந்தார்.

அத்துடன் 'ஒரு குறள் விளக்கம்' 'கவித்திறன் காட்டல்' போன்றவற்றையும் நடத்தியுள்ளார்.

13-04-2013 இல் புலவர் செ.வரதராசனார் அவர்களின் மறைவிற்கு பின்னர், கல்லைத் தமிழ்ச்சங்கம் மாவட்டம் மற்றும் மாநில அளவில் தேர்ந்தெடுக்கப்பட்ட இருவருக்கு ஐயா அவர்களின் நினைவாக, 'புலவர் செ.வரதராசன் குறள் மணம் விருது' வழங்கப்பட்டு வருகிறது.

அகில இந்திய வானொலியில் புலவரின் பங்களிப்பு:

'செஞ்சொல்வாணர்' செ.வ. ஐயா அவர்கள் திருச்சிராப்பள்ளி வானொலியில் 1953 இல் நடுநிலைப் பள்ளி மாணவர்களுக்கு கல்வி பற்றி 15 மணித்துளிகள் முதன்முதலில் உரையாற்றினார். புதுச்சேரி வானொலியில் மணிமொழி, இலக்கிய சொற்பொழிவு, திருக்குறள் உரையாடல், உழவுத் தொழில் பற்றிய உரையாடல், கவிதைகள் இவற்றுடன் இரண்டு முறை சித்திரைக் கவியரங்கம் என 35 - 36 முறைக்கு மேல் பேசி உள்ளார்.

பெரும்பாலானத் தலைப்புகள் திருக்குறள் மற்றும் செம்மொழித் தமிழ் தொடர்புடையனவே ஆகும். ஒருமுறை புலவர் செ.வ. அவர்கள், ஆ.இராசாராமன், கணேசனார் மூவரும் இணைந்து திருக்குறள் தொடர்பாகக் கலந்துரையாடினர்.

மேலும் பாவேந்தரின் 'சேர தாண்டவம்' 'இருண்ட வீடு' ஆகிய நூல்களை வானொலி நாடகம் ஆக்கி வழங்கியுள்ளார். தனி நாடகமும் வழங்கியுள்ளார்.

குறளில் குடும்பக்கட்டுப்பாடு:

'குழலினிது யாழினிது என்பதம் மக்கள் மழலைச்சொல் கேளா தவர்'

என்ற குறட்பாவில் குடும்பக்கட்டுப்பாடு





கூறப்பட்டுள்ளது என்று முதன்முதலில் ஒரு திருமணத்தில் புலவர் செ.வ. அவர்கள் கூறினார். அதனைக் கேட்ட புரிசை முருகேச முதலியார் பெரிதும் பாராட்டினார். "இவருக்கு தமிழக அரசு சிறப்பு செய்ய வேண்டும்" என்று கூறினார். இந்த கருத்தை ஒட்டிய ஐயா அவர்களின் கட்டுரை, 01-11-1977 இல் தமிழரசு இதழில் வெளியிடப் பெற்றுள்ளது.

பாரதிதாசன் பல்கலைக்கழக நூற்றாண்டு மலர்:

பாவேந்தர் அவர்களின் நூற்றாண்டினை ஒட்டி, திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகம் மலர் ஒன்றினை வெளியிட்டது.அதில் 'பாவேந்தரும் பைந்தமிழ்க் குறளும்' என்ற தலைப்பில் புலவர் அவர்களின் அரிய, நெடிய கட்டுரை ஒன்று இடம்பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

திருவள்ளுவர் - 2000 ஆம் ஆண்டு சொற்பொழிவுகள்:

திருவள்ளுவர் பிறந்து 2000 ஆம் ஆண்டு நிறைவு பெற்ற பொழுது, செந்தமிழ் வல்லுநர் புலவர் செ.வரதராசனார் அவர்கள் திருக்குறள் எழுச்சி உரைகளை நிகழ்த்தினார்.

சிற்றூர், பேரூர் இளைஞர் அமைப்புகள், ஆசிரியர் சங்கங்கள், நடுநிலை மற்றும் உயர்நிலைப் பள்ளி இலக்கிய கழகங்களில் 20 சிறப்பு சொற்பொழிவு ஆற்றினார். திருவள்ளுவரின் மாந்தரின வாழ்வறங்களை மக்களிடம் எடுத்துக் கூறினார். மக்களின் வாழ்வியல் சிறக்கப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளார்.

திருக்குறள் அமைப்புகளின் தேர்ந்த தொடர்புகள்:

சிறந்த உலக அமைப்புகளான குன்றக்குடி அடிகளாரின் 'உலகத் திருக்குறள் பேரவை' வேலா. இராசமாணிக்கனாரின் 'குறளாயம்' குறள்ஞானி கு.மோகனராசுவின் 'உலகத் திருக்குறள் மையம்' உவமைக் கவிஞர் சுரதாவின் 'உலகத் தமிழ் கவிஞர் பேரவை' போன்றவற்றில் தொடர்பு கொண்டு பணிபுரிந்து வந்துள்ளார்.

திருக்குறள் பேரவை 07, 08, 09-01-2000 ஆகிய மூன்று நாட்களாக நடத்திய விழாவில் பங்கேற்று உரையாற்றி உள்ளார். திருக்குறள் பேரவை, உலக திருக்குறள் மையம் மற்றும் தமிழ் ஈழத் தமிழறிஞர் கா.பொ. இரத்தினம் அவர்களின் உலகத் தமிழ் மறைக் கழகம் ஆகிய அமைப்புகள் அவ்வப்பொழுது நடத்திய உலக திருக்குறள் மாநாடு, சட்டவியல் மாநாடு, மருத்துவ இயல் மாநாடுகளில் பேராளராகி ஆய்வு கட்டுரைகளைப் படித்துள்ளார். அந்த கட்டுரைகள் அவ்வம் மாநாட்டு மலர்களில் வெளியிடப் பெற்றுள்ளன. 05 மற்றும் 06-பிப்பிரவரி 2005 இல் திருக்குறள் பேரவை, மதுரையில் நடத்திய இரண்டாவது உலகத் திருக்குறள் மாநாட்டிலும் ஆய்வுரை நிகழ்த்தி உள்ளார்.

சிற்றூர்களில் திருக்குறள் விளக்கப் பயணங்கள்:

உலகத் திருக்குறள் மையம் நடத்திய, 'சிற்றூர்களில் திருக்குறள் விளக்கப் பயணங்கள்' பலவற்றில் அவ்வப்போது ஐயா அவர்கள் கலந்து கொண்டுள்ளார்.

அவ்வகையில் காஞ்சிபுரம், திருவள்ளூர், சென்னை மற்றும் கன்னியாகுமரி முதலிய மாவட்டங்களில் ஏறத்தாழ 40 சிற்றூர்களில் கலந்து கொண்டு மகிழ்ந்துள்ளார். இஃது சிறப்பு மிக்க ஒன்றாகும்.

திருக்குறள் பலகை:

கல்லைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் அரசு மகளிர் மேல்நிலைப்பள்ளி நுழைவாயில் மற்றும் தனது இல்லத்தின் முகப்பிலும் திருக்குறள் பலகைகளை நிறுவியுள்ளார்.

ஒவ்வொரு நாளும் குறளும் பொருளும் எழுதி வந்துள்ளார். மற்றவர்களை வைத்து எழுதிடச் செய்தும் உள்ளார்.

இன்று கல்லைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் நகரின் பல பகுதிகளிலும் திருக்குறள் பலகைகள் நிறுவப் பெற்று பலரது கவனத்தையும் ஈர்த்து வருகிறது.

திருக்குறள் தாத்தா:

தன் வாழ்நாள் முழுவதும் தாம் செல்லும் வழிகளிலும், தனது இல்லத்தின் அருகாமையிலும் சிறுவர் சிறுமியர்க்கு திருக்குறளை சொல்லித் தந்தும், குறள்களைக் கூறக் கேட்டும் மகிழ்வார்.அத்தருணங்களில்

அச்சிறுவர்களுக்கு 'ஒரு குறளுக்கு ஓர் இனிப்புக் கட்டி' என வழங்குவார். அதனால் புலவர் பெருந்தகையை சிறுவர்கள் எங்கு , எப்போது கண்டாலும் ஓடி வந்து குறள் சொல்லி இனிப்புக்கட்டியைப் பெறுவர்.

சிறுவர்கள், செந்தமிழ் வல்லுநர் புலவர் செ.வ. அவர்களை, 'திருக்குறள் தாத்தா' என்றே அழைக்கலாயினர். இப்பெயரைக் கேட்டு ஐயா அவர்களும் பேருவகையைக் கொண்டு மகிழ்வார்.

செம்மொழிப் போராளி:

தமிழ் மொழியைச் 'செம்மொழி' என நடுவண் அரசு அறிவிக்குமாறு, சென்னையில் தலைநகர் தமிழ்ச் சங்கமும் சான்றோர் பேரவையும் நடத்தி வந்த போராட்டங்களில் இரண்டு முறை ஐயா அவர்கள் கலந்து கொண்டுள்ளார். இந்தியத் தலைநகர் புதுதில்லியில் 18-08-2003 இல் தமிழைச் செம்மொழி ஆக்கிட, அறிஞர் பெருமக்களுடன் இணைந்து 'உண்ணா நோன்பு' இருந்தார். தமது முதிர்ந்த அகவையிலும் 'தமிழே கதி' என எண்ணிப் பாடுபட்டார். அதன் பின்னர் இந்திய அரசு அத்தகைய சிறப்பைத் தமிழ் மொழிக்கு அளித்தது. இஃது ஐயா போன்ற புலவர்களுக்கு நெஞ்சில் பால் வார்த்தது. மேலும் மகிழ்ச்சியூட்டுவதாகவும் எழுச்சி அளிப்பதாகவும் இருந்தது.

இப்பெரும் அறிவிப்புதனைத் தொடர்ந்து 16-10-2004 அன்று தலைநகர் தமிழ்ச் சங்கம் சென்னை பாவாணர் அரங்கில் நிகழ்த்திய பாராட்டு விழாவில் 'செம்மொழிப் போராளி' என்ற பட்டத்தை, ஐயா அவர்களுக்கு வழங்கி உள்ளது. இதேபோல் 15-11-2004 அன்று தியாகதுருகம் பாரதி தமிழ்ச்சங்கமும் பட்டம் வழங்கி சிறப்பித்துள்ளது.

17-10-2004 அன்று, தமிழ்ச் செம்மொழி கண்ட சான்றோர்க்குப் பாராட்டும் நன்றியும் தெரிவிக்கும் பெருவிழா ஒன்றை கல்லைத் தமிழ்ச்சங்கம் சார்பில் நிகழ்த்தப்பட்டது.

அந்த விழாவில் முனைவர் புலவர் ஆதன் இளங்கீரன் அவர்கள் தலைமையேற்று சிறப்புரை ஆற்றினார்.

'பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்' அன்றோ?

பேராளர்களுடன் பெருமைமிகு செ.வ.:

செந்தமிழ் வல்லுநர் குறள் மணம் புலவர் செ.வரதராசனார் அவர்கள் எப்போதும் எழுச்சியுடன் இயங்கி வந்தவர். மேலானவர்கள், அறிஞர்கள் பாராட்டும் வகையில் பழகும் பண்புடையவர். அதே வேளையில் தன்னை ஒத்த சான்றோர்களையும் வளர்ந்து வரும் பல்லோரையும் அழகுடன் அரவணைத்தும் நெறிப்படுத்தியும் ஓங்கி வளரச் செய்தவர்.

பேரறிஞர் அண்ணா, இனமானப் பேராசிரியர், பேராசிரியர் இலக்குவனார், டாக்டர் மு.வரதராசன், முனைவர் ஔவை துரைசாமிப் பிள்ளை, ஔவை நடராசன், முனைவர் நன்னன், டாக்டர் மெ.சுந்தரம், அரங்கண்ணல், சிலம்பொலி செல்லப்பனார், கவிக்கொண்டல் மா.செங்குட்டுவன், முதுமுனைவர் இளங்குமரனார், புலவர் கா.கோவிந்தன், நாவலர் நெடுஞ்செழியன், திருக்குறளார் முனிசாமி, அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி உள்ளிட்ட பல சான்றோர்களுடன் பழகி, நட்புடன் விளங்கியவர்.

அதே போல தம்மிடம் மாணவராகப் படித்து உயர்ந்த பல்லோருக்கும் படிக்கட்டாக இருந்து நெறிப்படுத்தியவர் ஐயா அவர்கள்.

புலவர் செ.வ. எழுதியுள்ள நூல்கள்:

செந்தமிழ் வல்லுநர் புலவர் செ. வரதராசனார் அவர்கள், தமிழ்த்தாய் திருப்பள்ளி எழுச்சி மற்றும் தமிழ்ப்பாவை ஆகிய இரண்டு நூல்களையும் தனது 80 ஆம் அகவையின் சிறப்பு வெளியீடாக வெளியிட்டு மகிழ்ந்தார். திருக்குறள் - பாயிரம் காட்டும் பண்பாடு, திருக்குறள் - காமத்துப்பால் வழங்கும் வாழ்வியல் பாடங்கள், புலவர் செ.வரதராசன் கவிதைகள், கண்ணகி - தமிழரின் பண்பாட்டுச் சின்னம் மற்றும் திருக்குறள் உண்மை உரை போன்ற பல நூல்களை எழுதியுள்ளார். மேலும் அவர் எழுதியுள்ள பல நூல்களையும் விரைவில் கல்லைத் தமிழ்ச் சங்கம் வெளியிட உள்ளது.

ஐக்கிய நாடுகள் கழகம் நடத்திய போட்டி:

ஐக்கிய நாடுகள் சபையின் 25 - ஆம் ஆண்டு நிறைவினைக் குறித்திடும் வகையில் நடத்தப்பட்ட கட்டுரைப் போட்டியில் ஐயா அவர்கள் கலந்து கொண்டார்.அப்போட்டியில் இரண்டாம் பரிசினைப் பெற்றார். தமிழகக் கல்வி இயக்குநரின் சான்றிதழையும் பெற்றார்.

பிரபலமானவர்களின் முகவரிகள்:

மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்டு வரும் 'பிரபலமானவர்களின் முகவரிகள்' என்ற நூலில் தமிழறிஞர் என்ற பகுதியில் புலவர் செ.வரதராசன் அவர்களின் பெயரும் முகவரியும் அவ்வப்பொழுது தொடர்ந்து வெளியிடப்பெற்று வந்துள்ளன.




பிற இதழ்களிலும் எழுத்துப் பணிகள்:

'மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணா யினார்.'

- குமரகுருபரர் - நீதி நெறி விளக்கம்.

நமது கல்லைப் புலவர் குறள்மணம் ஐயா அவர்கள், தமது பணித் தொடக்க நாள் முதலே, அன்றைய சிற்றிதழ் - பேரிதழ்களிலும் கவிதை, கட்டுரை, சிறுகதைகள் எழுதி வந்துள்ளார். வள்ளுவர் வழி, தமிழ்நாடு, விடுதலை, முரசொலி, உண்மை, தமிழ்க்கொண்டல் இன்ன பிற இதழ்களிலும் இவரது படைப்புகள் வெளிவந்து உள்ளன. இவரது தமிழ் வளர்ச்சிப் பணிகள் தமிழ் மாண்பு, இன மாண்பு, இலக்கிய மாண்பு, தமிழ்ப் பண்பாடு, பகுத்தறிவு திறன், அறிவியல் வளர்ச்சி அனைத்தும் வெற்றி பெற்று, அறியாமை - ஒழுக்கமின்மை - தன்னலம் முதலியன நீங்கும் வகையில் அமைந்திருந்தன. இவை அனைத்தும் திருக்குறள் நெறியின் அடிப்படையில் அமைந்து, சிறப்பு பெற்று வந்தன ஆகும்.

பெற்ற விருதுகள்:

தமிழ்நாடு அரசு ஐயா அவர்களின் பணியைப் பாராட்டி, 'நல்லாசிரியர்' விருது (14-12-1975), 'திருக்குறள் நெறித் தோன்றல்' விருது (18-08-1985) வழங்கி மகிழ்வித்தது. தொடர்ந்து தமிழகத்தில் உள்ள பல்வேறு தலைசிறந்த தமிழ் அமைப்புகளும், பற்பல விருதுகளை வழங்கி சிறப்பித்துள்ளன. தமிழ் மாமணி, செந்தமிழ்த்

தொண்டர், திருக்குறள் தென்றல், திருக்குறள் தூதர், பண்பாட்டுச் செம்மல், செம்மொழிப் போராளி, வள்ளுவர் வழுதி, செஞ்சொல்வாணர் இப்படி 30 விருதுகளுக்கு மேல் பெற்றுள்ளார். எனினும் இவர் முதன் முதலில் கல்லக்குறிச்சி 'சுரதா மன்றம்' வழங்கிய 'செந்தமிழ் வல்லுநர்' (01-07-1985) என்ற விருதே சிறக்கப் பெற்றது எனலாம்.

திருவள்ளுவர் விருது:

ஐயா அவர்களின் 87 - ஆம் அகவையில் 2012 ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசு, தமிழ்நாட்டின் உயரிய 'திருவள்ளுவர் விருது'தனை செந்தமிழ் வல்லுநர் குறள்மணம் புலவர் செ.வரதராசனார் அவர்களுக்கு வழங்கிச் சிறப்பித்தது. இஃது பெருமைக்குரியப் புகழாகும்.

இல்லத்தரசியாரின் மறைவு:

அன்பு, கருணை மற்றும் மனித நேயம் இவற்றின் மொத்த முழு உருவமாகத் தோன்றியவர் உருக்குமணி அம்மையார் அவர்கள். இன்சொல், பணிவு, வந்தாரை வரவேற்றல், விருந்தினரைப் போற்றுதல், பிற உயிர்களிடத்தில் பற்று கொள்ளுதல், காலந் தவறாமை, கடமையை ஆற்றுதல் போன்ற பல்வேறு குணங்களில் சிறந்த ஆளுமையைக் கொண்டிலங்கியவர்.

'பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்பு
புத்தேளிர் வாழும் உலகு'

என்ற திருக்குறளுக்கு ஒப்ப நல்லதொரு இணையாகத் தனது இல்லத்தரசியாரைப் பெற்றிருந்தார் செந்தமிழ் வல்லுநர் புலவர் அவர்கள்.

அதனால்தான் தான் எண்ணியவற்றில் முழு ஈடுபாட்டுடன் ஐயா அவர்களால் உழைக்க முடிந்தது. அவற்றுள் வெற்றியையும் பெற முடிந்தது.

தன் இறுதிக்காலம் வரை தானே உணவைச் சமைத்து, தானே அருகிருந்து உணவைப் பரிமாறியும் ஐயா அவர்களைக் கண்ணுங்கருத்துமாகப் பார்த்துக் கொண்டவர் அன்னை உருக்குமணி அம்மையார் அவர்கள்.

ஐயா அவர்களின் மகிழ்ச்சியில், மனநிறைவில், புகழொளியில் தன்னைக் கண்டவர்; கொண்டவர்.

இயற்கை ஐயா அவர்களின் இல்வாழ்க்கைத் துணைவியாருக்கு உடல்நலத்தைக் குறைத்து ஒரே நாளில் 22-08-2011 அன்று உயிரிழக்கச் செய்து விட்டது. 02-10-1931 இல் பிறந்த உயிர் மறைந்து போனது.

தன் மனைவியை இழந்த ஐயா அவர்கள், தன்னையே இழந்தாற் போல உள்ளம் துடித்தார். அமைதியில் மூழ்கினார். ஆயினும் தன் கடமையைக் கைக்கொண்டார்.

ஆம்! அன்னையாரின் கண்கள் இரண்டும் கொடையாக வழங்கப்பட்டன.

தன்னுயிர் தான் அறப்பெற்றார்:

எழில்மிகு பண்பாளராம் இனிய நன்மகள் , ஐயா அவர்களின் இல்லத்தரசியார் திருமதி உருக்குமணி அம்மையார் அவர்களை இழந்த பிறகு சற்றே தளர்ந்து போனார், ஐயா அவர்கள்.

16-01-2012 ஆம் நாளில் தனது தள்ளாத நிலையில் 87 - ஆம் அகவையில் தமிழ்நாடு அரசின் திருவள்ளுவர் விருதினைப் பெற்ற போது மட்டுமே, சிறிது மகிழ்ச்சி அடைந்தார். அப்போதும் அன்னை அவரருகில் இல்லையே என்றும், இத்தகைய விருதினைப் பெறுங்கால், நற்றுணையாளரான உருக்குமணி அம்மையார் தன் அருகில் இல்லையே என்றும் உள்ளம் கலக்கமுற்றார் என்பதே உண்மை.

நாடு முழுவதும் ஐயா அவர்களை வணங்கிப் போற்றியது. மிகவும் நலிந்த நிலையில் ஐயா அவர்கள் ஐம்பெரும் ஆற்றல்களால் அரவணைக்கப்பட்டார். ஆம்! 13-04-2013 அன்று தனது 88 - ஆம் அகவையில், செந்தமிழ் வல்லுநர், குறள் மணம் புலவர் செ.வரதராசனார் அவர்கள் இயற்கை எய்தினார்.

உற்றாரும் உறவினர்களும், அறிஞர்களும், பெரியவர்களும், நாடும் வீடும் எனப் பல்லோரும் ஐயா அவர்களை இழந்து வாடினர்.

ஐயா புலவர் செ.வரதராசனார் அவர்களின் வேண்டுகோளின்படி அவரது கண்கள் இரண்டும் உடனடியாகக் கொடையாக வழங்கப்பட்டன.

மேலும் அய்யன் வள்ளுவர் கூறியுள்ள கருத்தின்படி தனது உடலும் எலும்பும் கூட, தனக்குப் பிறகும் மற்றவர்களுக்கு பயன்பட வேண்டும் என்று உணர்ந்து அவர் உரைத்திருந்தக் காரணத்தால், புலவர் செ.வரதராசனார் அவர்களின் முழு உடலும் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழக, மருத்துவக் கல்லூரி மருத்துவமனைக்கு கொடையாக வழங்கப்பட்டது.

'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு' அல்லவா?

ஐயா அவர்களின் கண்கள் மற்றும் உடற்கொடையைப் பற்றிய செய்தியை சென்னை, 'வள்ளுவர் குரல் குடும்ப' உறுப்பினரும், பொறியாளரும் மற்றும் வாழ்வியல் சிந்தனைகளை வடிக்கும் வண்ண எழுத்தாளருமான திரு சீனி.வரதராசன் அவர்கள், கடந்த 2024 ஆம் ஆண்டில் புஸ்தகா பதிப்பகத்தின் மூலம் வெளியிட்ட 'From Will to Wellness - Crafting Your Family's Future என்ற ஆங்கில நூலில் பக்கம் 118 இல் குறிப்பிட்டு பதிவு செய்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

செந்தமிழ் வல்லுநர் குறள் மணம்  புலவர் செ.வரதராசனார் அவர்கள் என்றென்றும் நகைமுகம் கொண்டவர். நிறையைக் காணும் அகமலரைப் பெற்றவர். பிறரை மகிழ்வித்து மகிழ்ந்த பெரும் வள்ளல்.

'நகையும் உவகையுங் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.'

எனும் குறளுக்கொப்ப உலகத்தாருடன் ஒன்றி வாழ்ந்தவரும் உயர்ந்து வாழ்ந்தவரும் கூட.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.' அன்றோ?

இன்று 25-04-2025 இல் செந்தமிழ் வல்லுநர் குறள் மணம் புலவர் செ.வரதராசனார் அவர்கள் நூற்றாண்டு காணுகின்றார். அவர் ஈண்டு இல்லையென்றாலும் அவர் எழுதிய நூல்களும் அவர் காட்டிய அறநெறிகளும் நம் நெஞ்சில் உள்ளன.வருங்கால மாந்தர்கள் மற்றும் இன்றைய இளைஞர்கள் ஒவ்வொருவரும் ஐயா அவர்களின் நூல்களை முழுமையாகப் படித்து அறிய வேண்டும். ஐயா அவர்களின் புகழைப் போற்ற வேண்டும்.கல்லைத் தமிழ்ச்சங்கம் ஐயா அவர்களின் வழியில் இன்னும் பல்லாண்டுகள் தொடர்ந்து நடைபயிலும். பலருக்கும் குறள்  மணம் விருதுகளை வழங்கிப் போற்றும்.வாழ்க தமிழ்! வளர்க புலவர் செ.வ. புகழ்!

# செந்தமிழ் வல்லுநர் புலவர் செ.வரதராசனார் 'குறள்மணம்' விருதாளர்கள்!

(2014 முதல் நூற்றாண்டு - 2025 வரையில்)

திருவாளர்கள் :ஆசுகவி பெ.ஆராவமுதன்,கவிஞர் சக்தி,கவிஞர் பெண்ணை வளவன், புலவரேறு அரிமதி தென்னகன், சைவ நெறிச் செம்மல் ந. சுப்ரமணிய பாரதியார் , குறிஞ்சி ஞான. வைத்தியநாதன்,மருத்துவர் அரங்க. செயபாலன்,கவிஞர் சி. இராமசாமி,பொறியாளர் குரு. கோவிந்தசாமி,பாவலர் அ.உசேன்,பொறியாளர் திருமதி தே ஹெலினா, புலவர் மது நாராயணசாமி,தமிழ்ச்செம்மல் ப. குப்பனார் தமிழ்ச்செம்மல் வி. கோவிந்தராசனார்,ஆய்வறிஞர் பி.கோ. கோவிந்தராசனார், தமிழ்ச்செம்மல் 'குறள் இனிது' சோம.வீரப்பன்,தமிழ்ச்செம்மல் புலவர் பெ. சயராமன், பாவலர் செ.சு.மலரடியான்,தமிழ்த்திரு இளவரச அமிழ்தன், கவிஞர் இராச. இளங்கோவன்,பாவலர் மா. முத்தமிழ் முத்தன்,தமிழ்த்திரு க.பெ.பாபா ராஜ் தெ. வே சஞ்சீவி ராயன், பொறியாளர் சீனி. வரதராசன், கவிஞர் சுரதா கல்லாடன்,முனைவர் இரா நக்கீரர், கவிமாமணி பாளை. இளமாறன்

மேற்கண்ட ஒவ்வொருவருக்கும் பொன்னாடை அணிவித்து, தகுதிச் சான்றிதழ் வழங்கி, ₹1330/- புதிய நாணயங்களை வழங்கியும் மகிழ்வித்து மகிழ்கின்றோம்.

- கல்லைத் தமிழ்ச்சங்கம் - கல்லக்குறிச்சி




இடமிருந்து வலம்-திருமிகு செ.வ.இராமாநுசன், செ.வ.மகேந்திரன், மறைமலை இலக்குவனார், செ.வ.புகழேந்தி,செ.வ.மதிவாணன்




குவலயமெங்கும் குறள் மணக்கச் செய்த புலவர்மணி செ.வரதராசனாரின் பத்தாண்டு இதழ்கள்

தினமணி இந்த வாரம்

ஞாயிற்றுக்கிழமை, 30 ஜூன் 2024

கலாரசிகன்

தமிழ்மணி

dinamanithamizhmani@gmail.com 30.6.2024

தவறான காரணங்களுக்காகக் கள்ளக்குறிச்சி இப்போது பரபரப்பாகப் பேசப்படுகிறது. கல்வராயன் மலையின் அடிவாரத்தில் அமைந்திருப்பதால், அதன் பெயர் கல்லக்குறிச்சி என்பதாகத்தான் இருந்திருக்க வேண்டும். அது என்னவோ, தமிழுக்கு அப்படியொரு உச்சரிப்பு சாபக்கேடு. க'ள்' க'ல்'லாகவும், க'ல்' க'ள்'ளாகவும் உச்சரிக்கப்படுகிறது.

கல்லைத் தமிழ்ச் சங்கத்தின் செயலாளர் செ.வ.மதிவாணனின் கடிதமும், மணி விழா மலரும், அவர்களது தமிழ்ச் சங்கம் குறித்த விவரங்களும் அனுப்பித்தரப்பட்டிருந்தது. 'கள்ளக்குறிச்சி வீதிகளில் கள்ளச்சாராயம் பெருக்கெடுத்து ஓடுகிறது' என்று பரபரப்பாக பேசப்படுவது தவறு; இங்கே 'வீதி தோறும் குறள் முழக்கம்தான் கேட்கிறது' என்று சொல்லாமல் சொல்கிறது மதிவாணனின் கடிதம்.



1962-இல் புலவர் செ.வரதராசனாரால் தொடங்கப்பட்ட அமைப்பு 'கல்லைத் தமிழ்ச் சங்கம்' வாரந்தோறும் சனி, ஞாயிறு தினங்களில் திருக்குறள் தொடர் வகுப்புகள் நடத்துவது என்பது அதன் நோக்கங்களில் ஒன்று. 1962-இல், 'முத்தமிழ் காவலர்' கி.ஆ.பெ.விசுவநாதம் தலைமையில் 'மாணவர் திருக்குறள் மாநாடு' நடத்தியதில் தொடங்குகிறது கல்லைத் தமிழ்ச் சங்கத்தின் தமிழ்ப்பணி.

கல்லைத் தமிழ்ச் சங்கத்தின் பணிகள் குறித்து மதிவாணன் அனுப்பி இருக்கும் தகவல்களைப் படித்தபோது பிரமிப்பு மேலிட்டது. திருக்குறள் வகுப்புகள் மட்டுமல்லாமல், இலக்கண வகுப்புகளையும், சங்க இலக்கியத் தொடர் சொற்பொழிவுகளையும் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் சான்றோர்களை வரவழைத்து நடத்துகிறார்கள். கவிதை இயற்றும் பயிற்சி வகுப்புகள், வெண்பா போட்டிகள் நடத்துவதுடன் 'குறள் மணம்' என்கிற திங்கள் இலக்கிய இதழும் புலவர் செ.வரதராசனாரால் நடத்தப்பட்டு வந்தது.

கள்ளக்குறிச்சி நகரில் பள்ளிகளின் நுழைவு வாயில், நகராட்சி அலுவலக நுழைவு வாயில் என்று அனைவரின் பார்வைபடும் இடங்களில் 'திருக்குறள் பலகைகள்' நிறுவப்பட்டுள்ளன. நாள்தோறும் குறள் பாக்களையும், அதற்கான பொருளையும் எழுதி வருகிறார்கள்.

அவரது கடிதத்தில் இருந்து நான் இன்னொன்றையும் தெரிந்துகொண்டேன். யாராவது இலக்கியப் பணியில் ஈடுபட்டால், அந்த ஜுரம் மற்றவர்களையும் பற்றிக்கொண்டு அவர்களது இலக்கிய ஆர்வத்தைத் தூண்டுவதாக அமையும் என்பதுதான் அது.

கல்லைத் தமிழ்ச் சங்கத்தைத் தொடர்ந்து சங்கைத் தமிழ்ச் சங்கம், கல்லை கண்ணதாசன் மன்றம், சின்னசேலம் தமிழ்ச் சங்கம், விருகாவூர் தமிழ்ச் சங்கம், தியாக துருகம் கம்பன் கழகம், கல்லக்குறிச்சி கம்பன் கழகம் என்று பல இலக்கிய அமைப்புகள் விழுதுவிட்டுப் படர்ந்திருக்கின்றன.

புலவர் செ.வரதராசனார் 60 ஆண்டுகளுக்கு முன்னால் போட்ட விதை இப்போது கள்ளக்குறிச்சியை, இலக்கிய அமைப்புகளின் நகரமாக மாற்றி இருக்கிறது. தமிழ் செழிக்கும் நகரத்தில், நச்சுப் பயிராக கள்ளச்சாராயம் புகுந்து பெயரைக் கெடுத்திருக்கிறதே. 'கள்ளக்குறிச்சி' என்பதை 'கல்லக்குறிச்சி' என்று பெயர் மாற்றம் செய்ய வேண்டும். அதன் பெயரில்கூடக் 'கள்' இருக்கக்கூடாது!






தலைவர்:செ.வ.புகழேந்தி

அன்புடையீர், வணக்கம்!

இயற்கையாக அமையப்பெற்ற கல்வராயன் மலைத்தொடரை ஒட்டி அல்லது உள்ளடக்கி அமைந்துள்ளதுவே, கல்லக்குறிச்சி மாவட்டம் ஆகும். நீர்வளம் மற்றும் நிலவளம் அமைந்துள்ள சிறந்த மாவட்டம் தான் கள்ளக்குறிச்சி ஆகும். இங்கு வாழும் மக்களும் உடல் நலம், மனவளம், ஒழுக்க நிலை எனப் பல்லாற்றானும் சிறந்து விளங்கி வருகின்றனர். கல்வி - கேள்வி - அறிவு - தொழில்நுட்பம் இவற்றில் தலைசிறந்து வாழ்பவர்களும் இப்பகுதி வாழ் மாந்தர்களே! இயற்கை வழிபாட்டிலும், இறைவழிபாட்டிலும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்லர்.

இத்தகைய சிறப்புகள் வாய்ந்த நாட்டில் தோன்றியவர் தான் செந்தமிழ் வல்லுநர் புலவர் செ. வரதராசனார் அவர்கள். செல்லப்பிள்ளை - இராமானுசம் அம்மாளின் தலைமகனாகத் தோன்றியவர். நல்ல நிலம், நல்வித்து! விளைச்சல் பற்றி கேட்கவா வேண்டும்? நாடு, மொழி, இனம் என்ற முக்கோணத்தில் வாழ்நாள் முழுவதும் சிறப்பாக உழைத்து உயர்ந்தவர் தான் செ.வரதராசனார் அவர்கள். மணிவிழா கண்ட, 63 ஆண்டுகளான கல்லைத் தமிழ்ச் சங்கம் ஐயா அவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. சொல், செயல், அமைப்பு, நூல்கள், உழைப்பு என தன்னையே ஈந்து சிறந்தவர் செ.வ. ஐயா அவர்கள்.அகவை 87 இல் தமிழ்நாடு அரசின் உயரிய விருதான திருவள்ளுவர் விருதைப் பெற்ற பிறகு, அகவை 88 இல், தான் பிறந்த ஆங்கிலத் திங்களிலேயே மறைந்தவர் ஐயா அவர்கள். தனது கண்கள், உடல் அனைத்தையும் மருத்துவ மாணவர்களுக்காக வழங்கிச் சென்றவர்.

ஊரும் உறவும் செந்தமிழ் வல்லுநர் புலவர் செ.வ. அவர்களை என்றும் உயர்த்திப் பிடித்து வருகின்றனர். ஐயா மறைந்து 12 ஆண்டுகள் ஆனாலும், புலவர் செ.வ. அவர்களைப் பற்றி எண்ணினாலும், பேசினாலும் மாந்தர்கள், எழுச்சி அடைவதைக் கண்டு வியந்துள்ளேன்.கல்லைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக புலவர் செ.வ. அவர்களும், அவர்களைத் தொடர்ந்து திரு மது. நாராயணசாமி அவர்களும், அவரையும் தொடர்ந்து அடியேனுமாக பொறுப்பில் இருந்து வருகின்றோம். எனது உடன்பிறப்புகள் அனைவரும் எனக்கு உற்ற துணையாக இருந்து, பணியாற்றி வருகின்றனர். குறிப்பாக, செயலாளர் செ.வ. மதிவாணன் அவர்கள் அயராது உழைத்து, வெற்றிக்கனியை ஈட்டி, வழங்கி வருகின்றார். கல்லக்குறிச்சி மாவட்டம் மட்டுமின்றி, அண்டை மாவட்ட அறிஞர்களும், ஆர்வலர்களும் நல்ல ஒத்துழைப்பை, நமது சங்கத்திற்கு வழங்கி வருகின்றனர்.

இதோ! செந்தமிழ் வல்லுநர் குறள் மணம் - புலவர் செ.வ. அவர்களின் இனிய நூற்றாண்டு விழாவினைக் கண்டு மகிழ்கின்றோம். புலவர் செ.வரதராசனார் அவர்கள், எங்களின் தந்தையார் என்பதில், நெஞ்சு நிமிர்த்தி நிறைவு காணுகின்றோம்.

இவ்விழா மலரைக் கண்ணுறும் அன்பர்களும், அறிஞர்களும் செ.வ. அவர்களின் புகழ் பாடி, பல்லாண்டுகள் நிலைபெற்று வாழ்க! வாழ்க!! என வாழ்த்தி மகிழ்கின்றேன்.நன்றி! வணக்கம்!